# ஸ்ரீ அஸ்தாமலகத் தோத்திரம்

## ஸ்ரீ குருதுதி.

---



இஃது

S. நாராயண ரெட்டியால்,

வேலூர்

ரீகார்ட் அச்சுக்கூடத்தில்

பதிப்பிக்கப்பட்டது.

**1913.**

ஸ்ரீ

# அத்தாமலகத் தோத்திரம்.

---

## அவதாரிகை.

ஸ்ரீசங்கர ஜகத்குரு மேற்குதிக்கில் விஜயஞ் செய்யுங்கால் அங்குள்ள ஸ்ரீவலி யென்னுங் கிராமத்து வசிக்கும் பிரபாகரர் என்னு மந்தணர் ஆசார்யாது வரவை யறிந்து தன் பதின்மூன்று வயதுள்ள புத்திரனை யழைத்துச் சென்று குரு சந்நிதியில் நமஸ்

கரித்து எழுந்து நின்று தாயையும் நமஸ்கரிப்பித்துச் சிறுவயது முதல் மூகனாய் ஒன்றிலும் பிரவிருத்தியற்று விருப்பு வெறுப்பு மானாவமான மின்றி யிருக்குமவன் வரலாற்றைச்சொல்ல, கிடந்த வண்ண மிருந்தபாலனை தேசிகர் கரங்கொண்டெடுத்துப் பார்த்துக் கிருபைகூற இவ்வாறு வினவலாயினர் :—

1. இங்குறும் நீயார் பிள்ளா யாருடை மைந்தனீதா
னெங்குசெல் கின்றா யுன்பே ரென்னநீ யெங் கிருந்து
மிங்குவந் தனையென் னுள்ள மின்புற விசைப்பா யென்று
சங்கர னவிலப் பாலன் சாற்றிட வாய்திறந்தான்.

## அத்தாமலக னுத்தரம்:—

2. நரனலன் சுரனி யக்க ஞனல னந்த னன்மற்
றரசனும் வணிகன் சூத்ர னல்லனற் பிரம சாரி
கிரகியும் வானப் பிரத்தன் கேடகல் சந்நி யாசி
நிரையினி லாருமல்லே னிசபோத வடிவ னுமே.

3. சூரியன் சகத்தொ ழிற்குச் சொற்றிடு நிமித்த மென்ன
யாருளஞ் சட்சு வாதி யாட்டத்திற் கேது வாவ
னொரலா வபாதி யும்விட் டாகாயம் போலி ருப்ப
னோரிய னித்த சித்த வருவனு மவ்வான் மாநான்.

4. எரியது. வெம்மை போல வெவணித்த போத ரூப
னொருவனுய்க் கம்ப மின்றி யொளிர்தரு மெவனைச்சார்ந்தே
யறிவிலாக் கரண மின்றி யாதிதந் தொழின்மேற் செல்லு
மறிவுரு நித்த சித்த னுயுள வவ்வான் மாநான்

5. அத்தத்திற் பதிப வித்த வம்முக முநத்தின் வேறோர்
வத்துவன் றதுபோற் புத்தி வருசிதா பாச சிவன்
சித்துரு வெவன்வே றாகச் சிறிதுமோர் வத்து வாகா
ணத்வய நித்த சித்த னுயுள வவ்வான் மாநான்

6. அத்தமே யில்லை யாகி லம்முகா பாச மின்று
வத்துவா யுற்ற தேக வதனமே விகற்ப மின்றி
புத்தியற் றிடவே யாவன் பொலிவனு பாசமின்றி
யத்திற நித்த சித்த னுயுள வவ்வான் மாநான்.

7 மனச்சட்சு வாதி யோடு மருவிடா திருப்பன் யாவன்
மனச்சட்சு வாதி கட்கு மனச்சட்சு வாதி யாவன்
மனச்சட்சு வாதி யாலே மருவிடப் படாதான் யாவ
னனித்தமி னித்த சித்த னுயுள வவ்வான் மாநான்.

8. கடசலங் தோறுந் தோன்றுங் கதிரவ னொருவ னேபோ
லுடலுறு முள்ளந் தோறு மொளிரினு நாளு வாகச்
சுடருவ னொருவன் றனே சுத்தசே தனனு யாவ
னடைதலி னித்த சித்த னுயுள வவ்வான் மாநான்.

9. ஓளியதா மனேகங் கண்கட் கொருரவி யொருகா லத்தே
யொளிசெயு முலகத் தைப்போ லொருஞான வடிவன் யாவ
னொளியதா யனேகம் புத்திக்கொளிர்ப்பனிவ் வுலகந்தன்னை
யளவிலா நித்த சித்த னுயுள வவ்வான் மாநான்.

10. இர்வியா லொளிருங் கண்ணே யெதிருறு முருவம் பற்று
மிரவியா லொளிரா தின்று மிதுபோலவ் விரவி தானு
மொருவனு மெவனொளி யுற்றிங்கொளிர்ப்பனோ நேத்திராதி
யருவனாய் நித்த சித்த ஞயுள வவ்வான் மாநான்.

11. சலசலத் தனேகன் போலச் சாருவ னேக பானு
சலனமில் சலத்திற் றுனே சாருவனேக ஞக
சலமதி யனேகன் போலச் சாரினு மேகன் யாவ
னலைதலி னித்த சித்த ஞயுள வவ்வான் மாநான்.

8. கடசலங் தோறுந்தோன்றுங் கதிரவ ஞெருவ னேபோ
லுடலுறு முள்ளங் தோறு மொளிரினு நாளு வாகச்
சுடருவ ஞெருவன் றுனே சுத்தசே தனனு யாவ
னடைதலி னித்த சித்த னுயுள வவ்வான் மாநான்.

9. ஒளியதா மனேகங் கண்கட் கொருரவி யொருகா லத்தே
யொளிசெயு முலகத் தைப்போ லொருஞான வடிவன் யாவ
ஞெளியதா யனேகம் புத்திக்கொளிர்ப்பனிவ் வுலகந்தன்னை
யளவிலா நித்த சித்த னுயுள வவ்வான் மாநான்.

10. இர்வியா லொளிருங் கண்ணே யெதிருறு முருவம் பற்று
மிரவியா லொளிரா தின்று மிதுபோலவ் விரவி தானு
மொருவனு மெவனொளி யுற்றிங்கொளிர்ப்பனோ நேத்திராதி
யருவனுய் நித்த சித்த னுயுள வவ்வான் மாநான்.

11. சலசலத் தனேகன் போலச் சாருவ னேக பானு
சலனமில் சலத்திற் றனே சாருவனேக னுக
சலமதி யனேகன் போலச் சாரினு மேகன் யாவ
னலேதலி னித்த சித்த னுயுள வவ்வான் மாநான்.

12. மூடன்றன் விழியி னைக்கார் மூடிட வதனால ருக்கன்
மூடுபட் டொளியற் றானா முன்னுதல் போல யாவன்
மூடனின் பார்வை யாலே முற்றுமே பெத்தன் போல்வ
னுடலி னித்த சித்த னாயுள வவ்வான் மானான்.

13. அகில வத்து விடத்து மனுசூத னேக னாகி
யகில வத்து விடத்து மசங்கனா யிருப்பன் யாவன்
ககனநேர் நித்த சுத்த களங்கமி லுருவன் யாவ
னக மிலா நித்த சித்த னாயுள வவ்வான் மானான்.

14. பலவித வுபாதி யாலே பலவிதம் படிகந் தோன்றும்
பலவித புத்தியாலே பலவித முனக்கு மாகுஞ்
சலமதி னிலவின் சலனஞ் சான்ருகப் பூன்ற னேயச்
சலமுறு புத்தியாலே சஞ்சல நினக்கு மாமே.

15. அத்தத்தி னெல்லி போல வான்மாவைக் காட்ட லாலே
தத்தா மலகத் தோத்ர மாகும்பேர் பெற்ற தன்றி
யத்தா மலக னென்றவ் வறிவினிற் பெரிய பால
னித்தரை யாவ ராலு மேத்திடப் பட்டா னம்மா

இதனைக்கேட் டாச்சரியத்தாற், றன்னை மறந்து நிற்கும் பிதா வை யாசாரியர் நோக்கி "இவன் முற்றவக்குறையா லுமக்கு மக னைதுமது பாக்கியமே. இகத்தில் இவனாலுமக்கோர் பிரயோசன மிராது. நம்பாலிருக்கட்டும்" என்றுரைத்தவனை யனுப்பிவிட்டுத் தன்னுடன் பாலனைக் கூட்டிச்சென்றனர். பின்னர் குருவைப்பா ர்த்து "இச்சிறுவன் சிரவணாதிசாதன மின்றியிப்பிரஹ்ம நிஷ்டை யடையக்காரணம் யாதென்று" சீடர்வினவக் குருவானவர் "இவன் தாய் முன்யமுனா தீரத்திற் றவஞ்செய்யும் சர்வைசுவரிய சம்புந்ந சாதுவான சித்தயோ கியிடம்தன்னிருவயதுள்ள குழந்தையை

விட்டு மற்ற ஸ்திரீகளுடன் ஸ்நானஞ்செய்கையில் சிசுமெல்ல நடந்துபோ யந்நதியில் வீழ்ந்திறக்க அதற்காற்றாது துக்கிக்கு மவளைத் தேற்றக்கருணை மிகுதியால் லச்சாது தம்முடலை விட்டச் சிசு வடவில் புக வதனாலேயே இப்பெரும்பேறு பெற்ற னன்" என்று புகன்றனர்.



அத்தாமலகத்தோத்திரம்

சம்பூர்ணம்.

---

ஸ்ரீ

# குரு துதி.

---

## அவதாரிகை.

ஸ்ரீ ஜகத்குரு சங்கரர் திக்விஜயஞ் செய்யத் தொடங்கி வடதிசைக்கண் விளங்கும் மாகிஷ்மதி நகரத்து வசிக்கும் கர்மகாண்டப்

பிரவர்த்தகரான மண்டன பண்டிதரை வாதத்தில் ஜயிக்க அவரது பார்யை 'என்னையும் ஜயிக்கினன்றி ஜயம்முற்றுறாது' என்றுரைத்த வருடன் வாதித்துத் தோற்றுப்பின் காமசாஸ்திரத்தில் வாதிக்க அதற்கவர் ஓர்மாத காலவரையறை கூறியோர் மலைக்குகையில் சீடர் காவலில் தன் சரீரத்தை வைத்து மரித்த அமருகராசனுடற் புகுந்து அவனது மனைவியரான நூற்றுவருடன் கலந்து காம போகமனுபவித்துக் கொண்டிருக்கையில் குரு கூறிப்போன காலங் கடந்தமையால் கவலையுற்றுச் சீடரில் சிலர் பாடகவேடந் தரித்துச் சென்றவ் வரசன் முன்னின்றித் தோத்திரத்தாலெத்த லாயினர்.

1. நேதிநே தியாதி வாக்காளிடேதித்து மூர்த்தா மூர்த்த
மேதுமே தள்ளற் கில்லா வெதைச்சுவ சொரூபமாக
வோதருஞ் சாதுவானே ருள்ளத்திற் கொள்ளுவார்க
ளாதிமெய் யறிவானந்த வவ்வத்து வன்றோ நீதான்.

2. உத்தியாங் குத்திறலே வுமியெனு மைந்து கோசம்
புத்தியாற் பிரித்துப் பின்னர் பொருந்திடு மரிசிபோலு
மெத்திறனச் சத்துக்கள் தம் மிதயத்தி லனுபவிப்ப
ரத்தமி ளித்த சித்த வவ்வத்து வன்றோ நீதான்.

3. பொறிகளாம் பரிக டம்மைப் புலன்களில் விளங்குந் தோட
வறிவெனுங் கசைய டித்தே யகமுகக் கயிற்று லீர்த்தவ்
வறிவறி யறிஞ ரெத்தி லிணைத்தொன்றுப் பிணித்தி ருப்ப
ரறிபொருட் கதீத மான வவ்வத்து வன்றோ நீதான்.

4. பூக்களி னின்ற வேறல்ப். பொருந்திடுஞ் சூத்தி ரம்போற்
சாக்கிரமாதி யான சருவத்தும் வேற தான
சாக்கியா னோக்கி யாதைச் சத்துக்க ளகத் தணைவ
ராக்கமு நீக்க மில்லா வவ்வத்து வன்றோ நீதான்.

5. கடகம குடாதி யாவுங் கனகமே யாகுமா போற்
சடசித்தா முலகம் யாவுஞ் சற்றுமே பின்ன மின்றிச்
சுடருமவ் வடிவா யென்று சொற்றிடும் வேதம் யாதை
யடிநடு முடிவில் லாத வவ்வத்து வன்றோ நீதான்.

6. இன்னிலித் தனுவில் யானு யிலங்குவ னேக னேயென்
றனிசமும் வேத வாதி யாயினோர் முயற்சி யோடு
மினிமையா யெடுத்து ரைப்ப ரெத்தத்து வத்தை நன்று
யனர்த்தமி லெதார்த்த மான வவ்வத்து வன்றோ நீதான்.

7. அருமறை வாக்கி ஞலே யகத்தினிற் சிரத்தை யோடு
மருந்தவம் யாகந் தான மாதிநல் லறங்க ளாலே
யருமறை யவர்க ளெத்தை யறிந்திட வவாவு கின்று
ரருமறைப் பொருளாய் நின்ற வவ்வத்து வன்றே நீதான்.

8. சாந்திமுத லான வுற்றுச் சந்ததந் தன்னுற் றன்னி
லாய்ந்தெதை யறிஞர் கண்டவ் வறிவின்ப மெய்யாயென்று
மீந்தெலா முடித்தொ ளிர்வர் மிகுபவக் கேத நீத்தே
யாழ்ந்தறி தத்வ மான வவ்வத்து வன்றோ நீதான்.

இதனைக்கேட் டாசார்ய ரவர்க் குத்தரவு கொடுத் தனுப்பி விட் டெனவ் வரச னுடல் விட்டுத் தன்னுடற் புக்குச் சென் றவ்வம் மையை வென்று அவ்விருவரையுந் தனக்குள் ளாக்கி யிக்குவலய முற்றும் விளக்க முற்றனர்.

குருதுதி சம்பூர்ணம்.

ஸ்ரீ சங்கராசாரியரருளிச் செய்த

# ஏக சுலோகீ.

## குருசீட வினாவிடை.

ஒளியுனக் கெதுபக லினனெனக் கிருள்விளக்
கொளியுண ரொளியெது கணதுண ரொளியெது
வொளிமதி மதியுண ரொளியெது வதுவக
மொளிதனி லொளியுநீ யெனகுரு சரியதே.

ஏக சுலோகீ

சம்பூர்ணம்.

---

## சுருதி வசனம்.

1. இருமூலே நடிமார் படிவயி றிதன்மே
விருமுப் பொருளுள நிறம்பல விவற்று
ளொரு பொரு ளாம்பல ரும்பென வுள்ளே
யிருவிரல்வலத்தே யிருப்பது மிதயம்.

2. அதன்முக மிகலுள தகமுள சிறுதுளே
யதனிலா சாதியொ டமர்ந்துள திருந்தம
மதனேயா சிரித்துள வகிலமா நாடிக
ளதுவளி மனதொளி யவற்றின திருப்பிடம்.

3. அகக்கம லத்தே யமல வசல
வகமுருவ மாகு மறிவே—தகத்தை
யகற்றிடுவ தாலவ் வகமா மறிவே
யகவீ டளிப்ப தறி.

4. அகிலவு பாதி யகன்ற வறிவே
தகமச் சிவமென் றணிச—மகத்தே
யகலாத் தியான மதனு லகத்தி
னகிலவா சக்தி யகற்று.

௫. அகிலவே தாந்தசித் தாந்தசா ரத்தை
யகமுண்மை யாக வறைவ—னகஞ்செத்
தகமது வாகி லறிவுரு வாமவ்
வகமதே மிச்ச மறி.

ஓம். தத். ஸத்.

பிரஹ்மார்ப்பணமஸ்து.

---

# NOTICE.

---

சுவாமி விவேகாநந்தர் சிகாகோ ஸர்வமத மஹா சபையில் புரிந்த ஹிந்துமத வேதாந்தப் பிரஸங்கங்கள் இங்கிலீஷ் புஸ்தகம் மிக சௌந்தர்யமான அவரது திரு உருவப்படத்துடன் ரூபா 0—4—0

ஷை தமிழ் மொழி பெயர்ப்பு 0—4—0

(இதில் பக்தி ஞான வைராக்கியங்கள் நிறைந்த பட்டணத்தார், தாயுமானவர், ராமலிங்க சுவாமிகளுடைய பாடல்களும் சேர்த்துள்ளது )



இந்த இரண்டு புஸ்தகங்களையும் வாங்குகிறவர்களுக்குக் கீழ்கண்ட ஆறு புஸ்தகங்களை விலையில்லாமல் இனாமாகக் கொடுக்கப்படும்.

(1) ஸ்ரீ அருணாசல அக்ஷரமணமாலை

(2) ஸ்ரீ அத்தாமலகத் தோத்திரம்.

(3) ஸ்ரீ மஹாவிஷ்ணு அக்ஷரமாலிகையும், ஸ்ரீ தாரகநாமஸ் துதியும்.

(4) அமிருதபிந்தோபநிஷத்.

(5) புருஷசூக்தம்.

(6) தி க்ரோத் ஆப் தி லில்லி.

The Growth of the Lily.

---